30th August 1961]

**SRI A. MARIAPPAN :** ஏற்கெனவே அவர்களுக்கு எவ்வளவு நிலம் கொடுக்கப்பட்டதோ அதற்கு குறைவாகத்தான் நிலம் கிடைத்திருக்கிறது என்பதை சர்க்காருக்கு அறிவித்திருக்கிறார்களா? மேலும் அரசியல் பூசல்கள் காரணமாக தொந்தரவுகள் இருந்துகொண்டிருக்கின்றன என்பதையும் வியாபாரிகள் அரசாங்கத்திற்கு தெரிவித்து இருக்கிறார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** கொடுத்ததற்கு குறைவாக அவர்கள் அனுபவித்து வருவதும் அரசாங்கத்திற்குத் தெரியாது. அதிகமாக ஆக்கிரமித்து இருப்பதை பற்றியும் தெரியாது.

**SRI M. KALYANASUNDARAM :** வியாபாரிகள் அவ்வளவு ஏமாந்தவர்கள் அல்ல. கொடுத்த நிலத்தை அனுபவிக்க சக்தி யற்றவர்கள் அல்ல. கனம் அங்கத்தினர் மாரியப்பன் போல் உள்ளவர்களுடைய உதவி அவர்களுக்கு இருக்கும்பொழுது அவர்கள் ஏமாந்தவர்களாக இருக்கமாட்டார்கள். ஹரிஜனங்கள் தங்களுடைய உரிமையை இழந்துவிட்டு வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். கோயில், கிணறு, மற்ற எல்லாப் பகுதிகளையும் சேர்த்து சுவர் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். புகார் செய்தது அரசியல் காரணத்திற்காக அல்ல. தாழ்த்தப்பட்டவர் வகை சேர்ந்தவர்களே புகார் செய்திருக்கிறார்கள் என்பது கனம் அமைச்சர் அவர்களுக்கு தெரியுமா? அவர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள நிலத்தைவிட அதிகமாக இல்லையென்றால், மராமத்திலாகா மந்திரியும், ரெவின்யூ மந்திரியும்—நானும்கூட வருகிறேன்—வந்து அளந்துப் பார்ப்பதற்கு தயாரா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இது விஷயமாக கலெக்டர் நேரில் சென்று பார்த்து ரிப்போர்ட் அனுப்ப வேண்டும் என்று கேட்கப்பட்டிருக்கிறார். அந்த ரிப்போர்ட் வந்த பிறகு மேலும் பரிசீலிக்கப்படும்.

*Government Tuberculosis Sanatorium (Tambaram)*

* 1494 *Q.*—**SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN) :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தாம்பரம் சானிடோரியத்தில் பலவித மரங்களை வைத்து மேலும் குளுமைப்படுத்த உத்தேசமுண்டா?

(இ) விவரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (இ). Avenue trees are planted periodically in the Sanatorium premises.

*Mobile Hospital*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of question No. 1495 is not in his seat, the question and answer will be printed in the proceedings.